# சைவ சமயத்தின் மாண்பு

[சி. குமரேசப் பிள்ளை]

சமயம் என்னும் சொல் ஆழ்ந்த பொருளை உடையது. வாழ்வில் ஒவ்வொரு சமயத்திலும் இடையீடின்றி மேற்கொள்ள வேண்டியது எதுவோ அதுவே சமயம். எச்சமயத்திலும் (நேரத்திலும்) கைக்கொள்ள வேண்டிய நெறிகளைக் கொண்ட சிறப்பினை உடையது ஆதலின் அஃது சமயம் எனச் சிறப்பித்துச் சொல்லப்பட்டது. மனித வாழ்வில் பயனைப் பெற சமயவொழுக்கம் இன்றி யமையாதது. உள்ளத்தின் உணர்வுகளைக் கட்டுப்படுத்தி ஒழுக்கத்தை நிலைநிறுத்தச் சமயம் ஒன்றினாலேயே தான் இயலும். சமயவொழுக்கம் மக்களின் இம்மை வாழ்வைச் சீர்படுத்தி மெய்ப்பொருள் நாட்டத்தில் ஊக்கத்தை எழுப்பிப் பரம்பொருளை அனுபவ நிலையில் அகத்தும் புறத்தும் தரிசிக்க வழி நடத்தும் ஆற்றல் வாய்ந்த அருள் சக்தி யாகும். அவ்வருள் சக்தியே வடிவமாய் அமைந்தது சைவ சமயம்.

சைவம் என்னும் சொல் சிவத்தை அடிப்படையாகக் கொண்டது எனும் பொருளது. சிவத்தை உணர்த்தும் நெறி சைவ நெறி சிவசம்பந்தமானது சைவம். சிவம் - மங்களம் - சுகம் பாக்கியம் - பேரானந்தம் - செம்மை என்னும் இன்பப்பொருள்களைக் கொண்டது. எனவே வாழ்வை மங்கலப்படுத்துவது எதுவோ அது சைவம். வாழ்வைச் சுகப்படுத்துவது எதுவோ அது சைவம். அழியாது பேரின்பத்தைத் தருவது எதுவோ அது சைவம். இன்பப் பொருளா கிய சிவமே மக்களுக்குத் துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் செய்வது. வேதம் கூறும் உருத்திரன் என்னும் சொல்லுக்கும் துன்பம் நீக்குபவன் என்றே பொருள். வைத்தியநாதன் என்னும் சொல்லும் அப்பொருளை உடையது. எனவே துன்பம் நீக்கவும் இன்பம் ஆக்கவும் விழைபவர் யாவரும் மேற்கொள்ள வேண்டும் பொருள் சிவம். சிவத்தை உணர்த்தி அஃதை அடைய வழி நடத்துவது சைவ சமயம்.

இந்து சமயம் எனப்படும் வேதத்தை ஆதாரமாகக் கொண்ட வைதீக சமயத்திலுள்ளிட்ட சைவம், வேதாந்தம், வைணவம் என்னும் நெறிகளுள் பழமையானது உயர்வானது சைவ சமயம். அது பாரத நாட்டிற்கு மட்டுமல்லாது உலகிற்கே பழமையான சமயம் என்பது ஆய்வாளரது கருத்து. பிற சாயங்களில் கூறப்படுகின்ற கருத்துக்கள் அத்தனையும் தன்னுள் உடைத்தாதல் பற்றிப் பொதுமையாயும் அவற்றுள் கூறப்படாத வேதசாரததைக கூறுவது பற்றிச் சிறப்பினதாயும் திகழ்கின்ற மாண்பினை உடையது சைவம். -

வேத சாரமாகத் தொகுக்கப் பெற்ற சைவ ஆகமங்கள் காமிகம் முதலாக இருபத்தெட்டு. இவ்விருபத்தெட்டு ஆகமங்களைக் கற்று உணர்ந்த நந்தி யெம்பெருமானுக்கும் உண்மைத் தெளிவு சித்தியாது மலைவு ஏற்படவே, பரமேசுவரனே கல்லால் நிழலில் அமர்ந்து அருளிய மெய்யுணர்வு பதினான்கு சாத்திரங்களாக விரிந்தன. அவையே சைவ சாத்திரங்கள் எனவும் சித்தாந்த சாஸ்திரங்கள் எனவும் பெயர் பெறும்.

சித்தாந்தம் சாதிப்பனவற்றுள் சிறந்தது முப்பொருள் உண்மை. அதாவது பதி, பசு பாசங்கள் (இறை, உயிர் தளை) என்பவை மூன்றும் உள்ள பொருள் என்பது.

உலகில் உள்ள மதங்கள் யாவுமே கடவுள் உயிர் உலகு என்னும் இந்த முப்பொருள்களை ஒவ்வொரு விதமாகக் கூறுவன. இவற்றுள் பொருந்தாதனவற்றைப் பரபக்கம் என்னும் பகுதியுள் அறிவுக்குப் பொருந்து முறையில் மறுத்துக் காட்டி சுபக்கம் என்னும் பகுதியில் மெய்ப் பொருளைத் தெளிய உரைப்பன சித்தாந்த நூல்கள். பதி என்பது இறைமுதற் பொருள். அஃது ஒன்றே அநாதி. இயலபீலே சித்துப்பொருள : இயல்பிலே முகதப்பொருள். தன் வயத்தனாதல் தூய உடம்பினனாதல் இயற்கை அறிவினனாதல், முற்றுமுணர்தல், இயல்பிலே பாசங்களில் நீங்குதல் பேரருளுடமை, வரம்பில் இன்பம் உடைமை, முடி விலாற்றல் உடைமை எனும் எண்வகைக்குணங்கள் உடைத்தாய் இலங்குவது. பசு என்பது ஆன்மா. ஆன்மாக்கள் எண்ணிறந்தன. இயல்பிலே அறிவு, இச்சை, செயல்களை உடையன வெனினும் அவை ஆணவ மலச்சார்பால் மறைக்கப்பட்டு தன்னையும் தலைவனையும் அறிய இயலா திருக்கும் இயல்பினையுடையன. பாசம் என்னும் சொல் தளை அல்லது கட்டு என்றும் பொருளை உணர்த்தும். அது சீவான் மாவைக் கட்டி நிற்பது. ஆணவம் கன்மம் மாயை என்னும் முப்பிரிவுகளை உடையது. இவற்றுள் ஆணவம் என்பது இயற்கையிலேயே உயிரோடு பொருந்தி நின்று அறிவை மறைத்து நிற்பதொன்று. கன்மம், மாயை எனும் ஏனைய இரண்டும் ஆணவமலம் நீங்கும் முகத்தால் ஆன்மாக்களைச் செயற்கையாக இடையே வந்து பற்றுவன.

பேரறிவுப் பொருளாகிய இறைவன் ஆணவத்தால் மறைக்கப்பட்ட அறிவுடைப் பொருள்களாகிய ஆன்மாக்கள் தன் வண்ணமாதல் பொருட்டு அவற்றோடு ஒன்றாயும் வேறயும், உடனாயும் அத்து விதமாய்க் கலந்து அருள் சக்தியால் மாயமலத்தைக் காரியப் படுத்திப் பலவேறு உடல்களையும் உலகங்களையும் படைத்துக் கொடுத்து, அவ்வுயிர்கள் அவ்வுடலங்களின் வழியாய் இன்பதுன்பங்கள் நுகருமிடத்துக் கன்மவினைக் கூட்டுறவும் பொருந்த அவ்வினை நுகர்ச்சியால் ஆணவமலம் அறச் செய்கின்றான். அவ்வாறு சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி ஆட்கொள்கிற அருள் திறம் பேசுவது சைவ சித்தாந்த மாண்பு.

பலவேறு சமயங்களையும் ஆராய்ந்து சித்தாந்தச் செந்நெறியாம் சைவ நெறியே சாலச் சிறந்தது எனத் தேர்ந்தெடுத்த ஜீவன் முக்தர் ஒருவர் வரலாற்றைப் பெரிய புராணம் பேசுகிறது.

சாக்கிய நாயனார் என்பார் பௌத்த சமயத்தைச் சார்ந்தவர். காஞ்சிபுரம் பல்கலைக்கழகத்தில் சமய ஆராய்ச்சி செய்யப் புகுந்தார். பலசமயங்களையும் ஆராய்ந்தார். உலக இயல்பைக் கொண்டே உண்மையை ஆராய்க்தறிய முற்பட்டார். இவ்வுலகமானது மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளாலும் தொட்டும், சுவைத்தும், கண்டும், உயிர்த்தும் கேட்டும் நுகரப் படுவதேயாம். அவ்வாறு நுகரப்படுகின்ற இன்பதுன்பங்களோ ஒவ்வொரு உயிர்க்கும் தனித்தனி.

காரணம் என்ன? ஆராயலானார். காரணம் இன்றி எக்காரியமும் நிகழ்வதில்லை. ஒவ்வொரு உயிர்களும் அனுபவிக்கின்ற இன்ப துன்பங் களுக்குக் காரணம் ஒன்று இருத்தல் வேண்டும். நாம் செய்கின்ற வினைகளுக்கு ஏற்பப் பயன் பின்னால் விளைவதைக் காண்பதால் இன்று அநுபவிக்கின்றதாகிய இன்ப துன்பங்களுக்குக் காரணமான வீனை ஒன்று முன்னால் உண்டாகி இருத்தல் வேண்டும். எனவே ஒவ்வொரு உயிருக்கும் முன் **செய்வினை** என்பது ஒன்றுண்டு என்பது பெறப்படவே **செய்வான்** ஒருவன் உண்டு என்பதும் தெளிவாயிற்று. செய்வானாகிய உயிர்கள் இன்று அநுப விக்கின்ற இன்பதுன்பங்களுக்கேற்ப செய்வினைகள் எக்காலம் செய்யப்பட்டன? இப்பிறவியிலேயே என்று துணிதற்கு இடமில்லை, ஏனெனில் நாம் இன்று அனுபவிக்கின்றதாகிய இன்ப துன்பங்களுக்கெல்லாம் காரணமான நன்மையோ தீமையோ ஆகிய வினைகளை இந்தப் பிறவியிலே, யாம் செய்தோம் என்று நம்மால் துணிந்து கொள்ள முடிவதில்லை. மேலும் ஒரு உயிர் பிறவியிலேயே இன்ப துன்பங்களில் அமைவதையும் காண்கிறோம்.

இப்பயன்களுக்கு ஏதுவாகிய செய்வினை நிகழ்ந்த முன்னைப் பிறவி உண்டு என்பதையும், அதன் பயனே இப்பிறவி என்பதையும் இப்பிறவியால் செய்யும் வினையின் பயன் மறுமை என்பதையும் தெளியவே செய்வினை **அதன் பயன்** ஒன்றுண்டு என்பதையும் கண்டார். செய்வினை செய்வான் அதன் பயன் என்னும் மூன்றும் உண்டு என்று அநுபவத்தால் உறுதிப்படவே செய்வான் செய்தவினையை அறிந்து அதன் பயனைச் சேர்ப்பான் ஒருவன் வேண்டாவோ எனச்சிந்திக்கலானார். உயிர்கள் தாமேதாம்வினை யைத்தேர்ந் தெடுத்துக் கொள்ளும். உயிர்களோடு வினையைச் சேர்ப் பான் ஒருவன் தேவையில்லை எனின்; எந்த உயிர்களும் துன்பத்தை விரும்புவதில்லை. உயிர் தானே தான்செய்த வினையைத் தேர்ந்தெடுத்து அதன் பயனை அனுபவிக்கிறது என்றிருந்தால் துன்பப் பயனை நீக்கி இன்பப் பயனை மட்டுமே ஏற்றுக் கொள்ளும் என்பது துணிபு. அவ்வாறு இன்பமே அநுபவிக்கின்ற உயிர்களைக் காண்கிலோம். ஆகவே உயிர்கள் தாமே சென்று வினையைத் தேர்ந்தெடுத்துப் பயனை அனுபவிக்கும் என்பது பொருந்தாது. செய்வினையே செய்வானாகிய உயிரைச் சென்று பொருந்துமாலோ எனின் வினை சடம் ஆகவே தானே சென்று பொருந்துதல் கூடாது. எனவே செய்வினையைச் செய்வானோடு சேர்த்து வினைப்பயனை நுகரச்செய்கின்ற சேர்ப்பான் ஒருவன் வேண்டு மெனக் கண்டார். இவ்வாறு உலகியலைக் கொண்டே உண்மை வகையால் ஆராய்ந்து பார்த்தால் செய்வினை, செய்வான், அதன் பயன், சேர்ப்பான் எனும் நான்கும் விதித்த முவாகப் பெறப்படு தலை உணர்ந்தார். இந்நால்வகைப் பொருளும் எச்சமயத்தில் கூறப்படுகின்றன என்று ஆராயலானார். உலகாயதம் முதல் வேதாந்தம் ஈறாகவுள்ள புறப்புறம், புறம், அகப்புறம் ஆகிய எவ்வகைச் சமயங்களிலும் இந்நால்வகைப் பொருளும் பொருந்துமாறு கூறப்படவில்லை எனக் கண்டார். சைவ நெறி ஒன்றிலேயே அவை பொருந்த விளக் கப்பட்டிருத்தலைக் கண்டார். அதுவே மெய்ந்நெறி எனக் கொண்டார். அந்த ஞான உணர்வுபெற்ற நிலையிலே சிவன் அருள் கைகூட சேர்ப்பானாகிய உண்மைப் பொருளும் சிவமே என்பதை உணர்ந்து அறிந்தார். உணர்ந்து அறிதல் என்பது அனுபவ அறிவு பெறுதல். இவ்வாறு உணர்ந்தமையைச் சேக்கிழார் பெருமான்.

**"செய்வினையும் செய்வானும் அதன்பயனும் சேர்ப்பானும்**
**மெய்வகையால் நான்காகும் விதித்த பொருள் எனக் கொண்டே**
**இல்வியல்பு சைவநெறி அல்லவற்றுக் கில்லை என உய்வகையால்**
**பொருள் சிவன்என் றருளவே உணர்ந்தறிந்தார்."**

எனக் கூறினார்.

இத்தகைய உணர்வு பெறுதலையே சைவஉணர்வு பெறுதல் என்பதனை,

**"செய்வானும் செய்வினையும் சேர்பயனும் சேர்ப்பவனும்**
**உய்வானும் உளன் என்றுணர்."**

என்று திருவருட்பயன் கூறுகின்றது.

இத்தகைய உணர்வைப் பெற்று சிவத்தை அடைதற்குச் சைவம் காட்டும் வழி சைவத்திறம் எனப்படும், அவை சரியை கிரியை யோகம் ஞானம் என நான்கு. மக்களுள் சமய உணர்வு பெற்றவர்கள் தாம் சார்ந்த சமய நெறிப்படி ஒழுகியும், அரிய தவங்கள் பல செய்தும் கலைபல தெரிந்தும், வேதம் ஓதியும், புராணம் உணர்ந்தும் வேதமுடிபாகிய உபநிடதப் பொருட்களை மிக ஆராய்ந்து தெளிவுபெற்றும் பல பிறவிகளிலாகச் செல்லுங்கால் சைவத் திறத்து அடைவர். அத்திறத்தை அடைந்தவர்கள் ஆலயங்களுக்கும் அடியார்களுக்கும் தொண்டு செய்தலாகிய சரியை நெறியிலேயே நின்றும், உருவத்திலே மூர்த்தியை எழுந்தருளப் பண்ணிப் பக்தியினால் அருச்சித்து, போற்றுதலாகிய கிரியை நெறி நின்றும், மூச்சை அடக்குதல் முதலான அகத்தொழில் மாத்திரையால் அருவத் திருமேனியை நோக்கிச் செய்யும் யோகநெறி நின்றும், சென்றதான புண்ணிய வசத்தினால் ஞான நூல்களை ஓதல், ஓதுவித்தல், கேட்பித்தல் கேட்டல், சிந்தித்தல், ஆகிய ஞான நெறிகள் கைகூடச் சிவனடியைப்பெறுவார் என்பதை,

**"புறச்சமய நெறி நின்றும் அகச்சமயம் புக்கும்**
**புகன் மிகுதி வழியுழன்றும் புகலும் ஆச்சிரமம்**
**அறத்துறைகள் அவையடைந்தும் அருந்தவங்கள் புரிந்தும்**
**அருங்கலைகள் பல தெரிந்தும் ஆரணங்கள் படித்தும்**
**சிறப்புடைய புராணங்கள் உணர்ந்தும் வேத**
**சிரப்பொருளை மிகத் தெளிந்தும் சென்றாற் சைவத்**
**திறத்தடைவர் இதிற் சரியை கிரியா யோகம்**
**செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்."**

என்று சித்தியார் பேசுகிறது.

இவ்வாறு படிப்படியாக அனைத்துயிர்களையும் அரனடியை அடைவிப்பது சைவத்திறம்.

அவ்வாறு அடைவிக்கின்ற திறத்திலே ஆண்டவன் அவரவர் நிலைக்கேற்றவாறு உள்ளில் நின்றும் புறத்து நின்றும் உணர்த்தி உணர்த்தி, சிவாநுபவத்தை ஊட்டி ஊட்டி தன்னடியே சார்விக்கின்ற அருளாட்சி சைவ சமய மாண்பு. ஆண்டவன் உயிர்கள் தோறும் உள்ளில் நின்று உணர்த்தி ஞானாநுபவத்தைப் படிப்படியாக அருளும் திறத்தையும் வேண்டியபடி அருளுருத் தாங்கி புறத்தே நின்று அருளும் திறத்தினையும் அவ்வருள் பெற்ற அடியார் வாயிலாகப்படிப்படியாக அருளும் திறத்தினையும் பரக்கப் பேசுவனவே திருமுறைகளும் புராணங்களும். அவன் அடியை வணங்குவதற்கும் அவனே உள் நின்று உணர்த்துகிறான் என்பதை "அவனருளாலே அவன் தாள் வணங்கி," என்று திருவாசகம் கூறும். கொடியவனாகிய சூரன் முருகப் பெருமானை எதிர்த்துப் போர் செய்யும் காலையில், முருகன் சூரன் உள்ளத்து ஆணவத்தைச் சிறிது நீக்கியருள தன் முன்னால் நிற்கும் சிறுவன் பரம்பொருளே என உணர்கிறான். பின் அவ்வருள் மறைய பரம்பொருளைச் சிறுவனாகக் காண்கின்றான் என்று கந்தபுராணம் பேசுகிறது. ஞானசம்பந்தப் பெருமானுக்கும், இயற்பகையாருக்கும், இளையான் குடியாருக்கும், சிறுத்தொண்டருக்கும் அவரவர் நிலைக்கேற்றவாறு 'தோடுடைய செவியனாயும்', "நீறுபொன் மேனியில் விளங்க தூர்த்த வேடம் தோன்றவும்', 'நற்றவத்தவர் வேடமே கொண்டும்', 'சித்த மகிழ்வயிர வராகியும்', திருக்கோலம் கொண்டுவந்து சிவஞானம் ஊட்டிய பெரு மையைப் பெரிய புராணம் புகழும். ஆண்டவன் மக்களை உய்வித்தல் பொருட்டே அடியார்களை இவ்வுலகில் பிறப் பிக்கின்றான். சுந்தரமூர்த்தி நாயனாரை" மாதவம் செய் தென் திசை வாழ்ந்திட தீதிலா திருத்தொண்டத் தொகை தர இவவுலகிறகு அனுப்புகிறார்.

**"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறை விளங்க**
**பூதபரம் பரை பொலிய புனிதவாய் மலர்ந்தழுதார்**
**சீதவள வயல்புகலி திருஞான சம்பந்தர்' தோன்றினார்**

திருநாவுக்கரசு பெருமான் "திருத்தொண்டின் நெறி வாழத் தோன்றினார். மாணிக்கவாசகர் பிறந்தருளியதை,

**"ஆயவளம் பதியதன் ஆமாத்தியரில் அருமறையின்**
**தூயசிவா கமநெறியின் நுறைவிளங்க வஞ்சனையான்**
**மாயனிடும் புத்தவிரு ளுடைந்தோட வந்தொருவர்**
**சேயவிளம் பரிதியெனச் சிவனருளா லவதரித்தார்."**

என்று திருவிளையாடல் செப்பும்.

இவ்வாறு இறைவன் யாண்டும் நிறைந்து நின்று அருளும் திறத்தினை நாவுக்கரசர்,

"மனத்தகத்தான் தலைமேலான் வாக்கி னுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடுந்தொண்டர்,
இனத்தகத்தான் இமையவர்தஞ் சிரத்தின் மேலான்

ஏழண்டத் தப்பாலான் இப்பாற் செம்பொன்,
புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதினுள்ளான்
பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றினுள்ளான்,
கனத்தகத்தான் கயிலாயத் துச்சியுள்ளான்
காளத்தி யானவனென் கண்ணுளானே."

என்று பாடுகின்றார். இன்னோரன்ன அருள் திறமே யாண்டும் பேசும் மாண்புடையது சைவ சமயம்.

இதுகாறும் கூறியவற்றால் சமயம் என்பது மக்கள் வாழ்விற்கு இன்றியமையாத தொன்றென்பதும், சமயங்கள் பலவற்றுள்ளும் காலத்தாலும் கருத்தாலும் தரும் அநுபவநிலையாலும் உயர்ந்தது சைவம் என்பதும் அச் சைவம் சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டதென்ப தும், அவனருளுபதேசத்தால், மெய்யுணர்வுபதினான்கு சாத் திரங்களாக விரிந்துள என்பதும், பசு, பதி, பாச உண் மையும், பதி ஒன்றாயும், வேறாயும், உடனாயும் உயிர் DUL5களோடு, அத்து விதமாய்க் கலந்து அருளால் ஐந்தொழில் ஆற்றுகிறான் என்பதும், செய்வினை, செய்வான், அதன் பயன், சேர்ப்பான் எனும் நாற்பொருளும் பேசும் திறம் சைவநெறிக்கே உளது என்பதும், சிவநெறியை அடை வதற்கு வகுத்தபடி நிலைகள் சரியை முதலாநான்கென் பதும், அருளுருவாயமைந்த இறைவன் பல்வேறு நிலையில் உயிர்களின் பக்குவநிலைக்கேற்ப அருளுகிறான் எனும்சைவ சமய மாண்புகள் தெற்றென விளங்கக் காண்கின்றோம். மாண்புடை அச்சைவ நெறி நின்று நீங்காப் பெருவாழ் வாம் சிவவாழ்வு எய்துவோமாக.

சித்தாந்தம் - 1964 ஸ்ரீ - ஜூன், ஜூலை மீ